# மதமும் மனிதாபிமானமும்



டாக்டர். K. N. அறிவியல் ஆய்வுமையத்தின்
முப்பது ஆய்வுகளின் சுருக்கம்



ஆசிரியர்

க்டர் கா. நடராஜன்

# Dr. K. N. அறிவியல் ஆய்வு மையம்

## Dr. K. N. STUDY CENTRE



**மதமும் மனிதாபிமானமும் ஆன**
**முப்பது ஆய்வுகளின் சுருக்கம்**

•

**Dr. கா. நடராஜன் B.Sc., M D.,**
முன்னாள் மருத்துவப் பேராசிரியர்
ஸ்டான்லி மருத்துவக் கல்லூரி, சென்னை
(இயக்குநர், Dr. K. N. அறிவியல் ஆய்வு மையம்,)

**எழிலகம்**
46. செல்வ வினாயகர் கோயில் தெரு,
திருவத்திபுரம் (செய்யாறு)
Pin — 604 407.

எழிலக வெளியீடு — 17
முதற் பதிப்பு : செப்டம்பர் 1994.


விலை : ரூ. 5-00



ISBN 81 - 85703 - 16 - 7

வெளியீடு :

எழிலகம்

46. செல்வ வினாயகர் கோயில் தெரு,
திருவத்திபுரம் (செய்யாறு)
திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம்
Pin — 604 407

**கிடைக்குமிடங்கள்:**

1. 55, IV அவின்யூ, அசோக்நகர், சென்னை - 600 083
   தொலைபேசி : 4824330, 4824177.

2. 17/12 பீட்டர்ஸ் சாலைக் குடியிருப் பு,
   இராயப்பேட்டை. சென்னை — 600 014.

---

அச்சிட்டோர் :
அலைகள் அச்சகம்,
36, தெற்குச் சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை — 600 024.

# ஆசிரியர் முன்னுரை

Dr. K. N. அறிவியல் ஆய்வு மையத்தின் முதல் ஆண்டுவிழா சமயம், ஆண்டு அறிக்கையாக, ஆய்வு செய்த கருத்துக்களை வரிசைப்படுத்தி, அவற்றைக் குறித்து சுருக்கமாகக் கூற இருந்தேன். முன்னைய ஆய்வின் சுருக்கத்தை எழுதிப் படித்து வந்தேன். இவற்றையே ஒரு புத்தகமாக வெளியிட எண்ணினேன். இதே கருத்தைப் பல நண்பர்களும் கூறி, 'உடனே அச்சிட்டு ஆண்டுவிழா சமயத்தில் அனைவருக்கும் வழங்கிடலாம். தினசரி, வார ஏடுகளுக்கும் அனுப்பலாம்' என்றனர்.

அவ்வாறே, முன் கூட்டக் கருத்துத் தொகுப்பினை புத்தகமாக வெளியிடுவதற்கேற்ப — edit செய்து, திருத்தி வழங்குகிறேன்.

ஒவ்வொரு ஆய்வு சமயமும், ஜஸ்டிஸ் வேணு கோபால், புலவர் நன்னன், பேராசிரியர் அய்யாசாமி, டாக்டர் வைத்தியலிங்கம், சா. சுப்பிரமணியம், மாணிக்கசண்முகம், டாக்டர் பூரணையன், டாக்டர் ந. பஞ்சாட்சரம், சத்தியநாராயணசிங், ஜி.என்.சீனிவாசன் தென்றல், வீரமர்த்தினி போன்ற பல நண்பர்கள் வழங்கிய கருத்துகளும், வினாக்களும், சிந்தனையைத் தூண்டுவன. அவற்றையெல்லாம் எழுதுவதாயின் இச்சிறு புத்தக அளவு மிகும், விழாவுக்குள் வெளியிட இயலாது என அஞ்சி, இப்போது அவற்றை வெளியிடவில்லை. பின்னர் பெரும் புத்தகமாக வெளியிடும்போது சேர்த்து வெளியிடலாம்.

நம் அறிவியல் ஆய்வு மையம், தலைப்புக்கேற்ப பல, அறிவியல் நிலைகளை ஆய்வு செய்யும் கூட்டம் ஆயினும், நம் அடிப்படைக் குறிக்கோள் ''அறிவியல் வழி மனிதாபிமான அடிப்படையில் அமைந்தது. மனிதாபிமானம் காக்கப்பட வேண்டுமென்பதற்கு, அதற்கான ஆவன செய்தல்'' எனும் கருத்தில்அமைந்தது. அதற்கேற்ப அவ்வப்போது, மனிதாபிமானம் காக்கப்பெற்ற நிகழ்ச்சிகளையும், அது மறுக்கப்பெற்ற நிகழ்ச்சிகளையும் கூறிவந்தேன். அவற்றையும் இப்புத்தகத்தில் வெளியிடுகிறேன்.

•

நம் ஆய்வு மையத்து கூட்டங்களுக்கு வருகை தந்தவர்களுக்கும், கலந்துரையாடலில் கலந்து கொண்டவர்களுக்கும் நன்றி.

இவ்வெளியீட்டை குறுகிய காலத்தில் அச்சிட்டுத் தந்த, அலைகள் அச்சக உரிமையாளர், நண்பர் திரு. பெ. நா. சிவம் அவர்களுக்கும் நன்றி.

55, IV அவின்யூ
அசோக்நகர், சென்னை -600 083.
தொலைபேசிகள் : 4824330, 4824177.

அன்புடன்,
**கா. நடராஜன்.**

# ஆய்வு செய்த தலைப்புகள்

***1993***

1. செப். 18. **தொடக்கவிழா.**
எதற்கு இந்த ஆய்வுமையம்?
என் வாழ்க்கைத் தத்துவம்

2. செப். 25. **தனிக்கருணை.**
ஒரு வெள்ளை மூதாட்டியின் மனிதாபி மான உணர்வு

3. அக். 2. **மதமும் மனிதாபிமானமும்.**
ஐந்து பகுதிகளாக.

**முதல் பகுதி** : கடவுள் எனும் தத்துவம் தோன்றியது எவ்வாறு? சிந்தனை செய்யவல்ல மூளைஇன்றி, கடவுள் எனும் சக்தி இருக்க இயலாது.

4. அக். 9. **இரண்டாம்பகுதி** : பலரும் கடவுள் எனும் கற்பனையை நம்புவதேன்? யார் நம்பாதவர்கள்?
திலீபனின் மனிதாபிமானம்.

5. அக். 16. **மூன்றாம்பகுதி** : புரியாத நிலைகளில், அவை ஆண்டவன் திட்டம்(Teleologi-cal) எனக் கூடாது. மதவெறிவழி மனிதாபிமானம் மறுக்கப்படுவது குறித்து.

6. அக். 23. **நான்காம்பகுதி** : தன்னம்பிக்கையை இழக்கச் செய்வது மதம். கல்வி ஓடையில் மதமெனும் முதலைகள்.

| | | |
|---|---|---|
| 7. | அக். 30 | **ஐந்தாம் பகுதி :** மதத்தை மறுப்பதினும், மனிதாபிமானம் காக்கப்படவேண்டும். மனிதாபிமானம் வலியுறுத்தப்பெற்ற அண்ணாவின் கடைசிக் கடிதம். |
| 8. | நவம். 6. | **நம்மை நாமே அழித்துக் கொள்ளக் கூடாது:** டாக்டர். K. N. அவர்களின் பத்து கட்டளைகள். |
| 9. | நவம் 13. | **முன்பிறவி, மறுபிறவி, ஆத்மா.** |
| 10. | நவம் 20. | **பேய் பூத இரவு** (Halloween) |
| 11. | நவம் 27. | **விதி.** |
| 12. | டிசம். 11. | **அற்புதங்களும் அவதாரங்களும்.** |
| 13. | டிசம். 18. | **மனிதாபிமானம்**<br>**முதல் பகுதி:**<br>மனிதாபிமானம் மறுக்கப் பெற்ற, காக்கப்பெற்ற சில நிகழ்ச்சிகள். |
| 14. | டிசம். 25. | **மனிதாபிமானம்**<br>**இரண்டாம் பகுதி:**<br>இரண்டாம் உலகப்போர் முதல் இன்று வரை உலகெங்கிலும் நடைபெறும் மனிதாபிமானம் மறுக்கப்பெற்ற நிகழ்ச்சிகள். |

***1994***

| | | |
|---|---|---|
| 15. | ஜன.1. | **மாந்தளிர் மடிவதேன்?** |
| 16. | ஜன. 22 | **அறிவியலும் சமுதாயமும்** |
| 17. | பிப். 12. | **மங்கலம் என்ப மனைமாட்சி** |

18. பிப். 26. இல்லற அமைப்பில் புதியதிட்டம்

29. மார்ச் 12. பிறப்பும் இறப்பும்

20. மார்ச்.16. தீராதவினையெல்லாம்...

21. ஏப். 9. தலைவெட்டி முனியப்பன்

22. ஏப். 23 ஒருவழிப்பாதை-இருவழிப்பாதை

23. மே. 14. மங்கையரின் மார்பகமும் மகேசனின் மகிமையும்

சர்பியா நாட்டில் மதவெறி அழித்த பல லட்சமக்கள்.

அட்மிரா, பாஸ்கோ எனும் இளங் காதலர்களைக் கொன்ற மதவெறி.

24. மே. 28. ஆண்டவனற்ற அறிவியல்

25. ஜூன். 11 கடவுள்-மதம்-நாத்திகம்

26. ஜூன். 25. கடவுள் ஒரு மருத்துவம்.

27. ஜூலை. 9. ''வாய்மையே வெல்லும்'' சரியா?

28. ஜூலை 23. தலைமுடி, தாடி மீசை, நாகரீகம்

29. ஆகஸ். 13. கோளங்களும் மரணங்களும்

30. ஆகஸ். 27. அறிவியல் வெறும் இயற்பொருள்வாத மல்ல; அதுவே ஆத்மாவுக்கு உதவுவது.

## டாக்டர் கா .நடராஜன் அவர்களின் சிந்தனைக் கட்டுரை அடங்கிய நூல்கள்

அறிவியலும் மனிதாபிமானமும்

மனிதாபிமானம்

### அவரின், தமிழில் மருத்துவ நூல்கள்

நோய் அறிதல்

தொத்து நோய்கள்

இருதய நோய்கள்

நோயற்ற வாழ்வு

பால் உணர்வு மருத்துவம்—சில ஆலோசனைகள்

இருதய மாரடைப்புக்குப்பின்

இரத்தக் கொதிப்பு

இவை அவரிடமும் கிடைக்கும்.

### ஆய்வு ஒன்று

### தொடக்க உரை:

## தம் வாழ்க்கைத் தத்துவம்

**1993**- ஆம் ஆண்டு செப்டம்பர் 18-ஆம் நாள், மாலை 4 மணி அளவில், டாக்டர் K. நடராஜன் அவர்கள், அறிவியல் ஆய்வு மையத்தின் தொடக்கவிழாவுக்கு வருகை தந்தவர்களை வரவேற்று, எதற்கு இவ்வித ஒரு மையம் என்பதற்கான விளக்கத்தை அளித்தார்.

1947-ஆம் ஆண்டு தாம் தாம்பரம் சேனிடோரியத்தில் இருந்தது முதலே தம் சிந்தனையில் தோன்றிய பல கருத்துக்களையும் எழுதி வருகிறார் அவர். அவற்றுள் சில புத்தகங்களாக வெளியிடப் பெற்றிருந்தாலும், பெரியார் நூலக வாசகவட்டத்தாரிடையேயும், API Madras chapter மருத்துவர்களிடையேயும் உரைநிகழ்த்தி இருந்தாலும், அவரின் கருத்துகள் மக்களிடையே சிறப்பான இடம் பெறவில்லை.

தமக்கு 73வயது நடைபெறுகிறது. தம் வாழ்வின் மாலை மங்கும் நிலையில் (Evening Twilight zone) உள்ளமையால், தம் காலத்திற்குள், தம் கருத்துகள் பலவற்றையும் சிலரேனும் நன்கு புரிந்து கொண்டு மக்களிடையே அவற்றைப் பரப்ப வேண்டும் என்னும் தம்உள்ளத்தின் அறைகூவலுக்கேற்ப, இவ்வாய்வுமையத்திற்கு வழிவகுத்துள்ளார் என்ற முன்னுரைக்குப்பின்,

தம் வாழ்க்கைத் தத்துவத்தின் சுருக்கத்தைத் தமிழிலும், ஆங்கிலத்திலும் படித்துக் காட்டினார்.

''மதம், மொழி, இனம், நாடு எனும் பல பிரிவினை எண்ணங்களையும் விட்டு, மனிதாபிமானம் மட்டும் பேசப்படவேண்டும், காக்கப்படவேண்டும், எங்கும் எப்பொழுதும்'' என்று கூறி, That is my plea to all the Human beings, to practice Humanism என்றார்.

## ஆய்வு இரண்டு

## தனிக் கருணை

தினசரி வாழ்வில் அவ்வப்போது நிகழ்ந்த சில ஆபத்து நிலைகளைக்கூறி, இவற்றுள் சிலர் காக்கப் படுவதையும் சிலர் இறந்துபோவதையும் எடுத்துக்கூறி, உயிர்தப்பியவர்கள், அதை ஆண்டவனின் தனிக்கருணை என்று அவனுக்கு நன்றி செலுத்துவார்கள். சில ஆபத்துநிலைகளில் ஒன்றும் அறியா பச்சிளம்குழந்தைகளும் இறந்து போகிறார்களே; சிலர், பல துண்டுகளாக வெட்டப் படுகிறார்களே; இது யார் கருணை என்று வினா எழுப்பி, ஆபத்து நிகழ்ச்சிகளுக்கும் ஆண்டவனுக்கும் ஒரு தொடர்புமில்லை; அவை- சில நிகழ்ச்சிகள். எப்படி நிகழ்ந்தன, எப்படி தடுத்திருக்கலாம், மீண்டும் நிகழா வண்ணம் எப்படி முன்னெச்சரிக்கை எடுக்கலாம் என்று ஆய்வது அறிவுடைமை. அதைவிட்டு தம்மைக் காத்ததற்கு ஆண்டவனுக்கு நன்றி என்பது சரி அல்ல என்றார்.

### மனிதாபிமானம் காக்கப்பெற்ற ஒரு நிகழ்ச்சி

தன் மகனின் பிறந்தநாள் அன்று அமெரிக்காவில், ஒரு வெள்ளை மூதாட்டி பல பரிசுப் பொருள்களோடு ஒரு

டாக்சியில் செல்கிறார். டாக்சி ஓட்டுனர் ஒரு கருப்பர். அவனுக்கும் அன்று பிறந்தநாள். ஆனால் பரிசு தருவார் யாருமில்லை. அன்னை மறைந்து விட்டார். மனைவியும் புறக்கணித்து விட்டாள். எனவே சற்று ஆத்திரத்தோடு வேகமாக ஓட்டுகிறார். மூதாட்டி, ''பரிசுப்பொருள்கள் உடைந்துவிடும். மெல்ல ஓட்டப்பா'' எனக்கேட்டுக் கொண்டபின் மெல்ல ஓட்டிச்சென்றான். மூதாட்டி விசாரித்தபோது, அவன்பிறந்தது கனடா நாட்டு மாட்ரில் நகரத்தில் என்றான். மூதாட்டி வியப்புற்று, ''என் மகன் பிறந்ததும் அங்குதான். அன்று மகாராணி எலிசபத் அவர்கள் மருத்துவமனைக்கு விஜயம் செய்தார்கள். அங்கிருந்த நோயாளிகள் அனைவருக்கும் ரோஜாமலர் தந்தார்'' என்றார். இதைக்கேட்டஓட்டுனர் ''தன் தாயின் பைபிள் புத்தகத்தில் காய்ந்து கிடந்த ரோஜா இதழ் களின் விளக்கம்'' கிடைத்தது என்றான்.

''மலரோடு என் மகன் பிறந்தான் என்பது உனக்கும் பொருந்தும், நீயும் என் மற்றொரு மகன்தான்'' எனக்கூறி, அவனை அணைத்து அவனுக்கும் சேர்த்து பிறந்தநாள் கொண்டாடினார். பரிசுகள் தந்தார்.

இது எங்கோ நிகழ்ந்த நிகழ்ச்சியாயினும் அம் மூதாட்டியின் மனிதாபிமான உணர்வு நம்மையும் நெகிழச் செய்தது.

**ஆய்வு-3 முதல்-7 வரை**

## மதமும் மனிதாபிமானமும்

இத்தலைப்பினை ஐந்து பகுதிகளாக ஆய்வுசெய்தார் ஐந்து நாட்களில்.

**முதல் பகுதி:** ஆதிமனிதன் நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம் எனும் இயற்கைச் சக்திகளை வியந்து அவை தன் அறிவுக்கு அப்பாலான ஒரு மேலான சக்தியால் இயங்குவதாக எண்ணி, அவை தனக்கு நலம் அளிப்பன என்பதை மனதில் கொண்டு, ஆங்கிலம் பேசிய மனிதன் ''Good Forces' எனத் தொடங்கி அவற்றை ஆட்டி வைப்பவர் God, என்றான். தமிழ்பேசிய மனிதன் தன் அறிவுக்கு அப்பாற்பட்டவன், அனைத்தையும் கடந்தவன் என்ற கருத்துப்பட 'கடவுள்' என்றான்.

உலகில் பல பகுதிகளிலும் வாழ்ந்த ஆதிமக்கள் தம் தம் கற்பனைக் கேற்ப பல கடவுள்களைக் கற்பனை செய்தார்கள். அவற்றின் வழி பலமதங்களும் தோன்றின.

இக்கடவுள் எனும் சக்தி, அண்ட சராசரத்தையும் படைத்தல், காத்தல், அழித்தல், எனும் முத்தொழில்களைச் செய்கிறதாம். காக்கும் நிலையில், அணுவுக்கு அணு வானஎலக்ட்ரான் புரோட்டான் முதல், அப்பாலுக்கு அப்பாலான, கோடிகோடி நட்சத்திரங்கள் ஈறாக, பல வற்றின் விதியையும் தீட்டிவருபவன். ''பாவங்கள்'' செய்த பின்னும் மன்னிப்புவேண்டி தொழுகைசெய்தால், மன்னிப்பான் என்ற கருத்துப்பட பல மதங்களும், கடவுள் எனும் அச்சக்தியைச் சிந்தனை செய்யவல்ல ஒரு மாபெரும் சக்தி— A Mighty Thinking Force— என்றனர்.

* 1. 5 கிலோ கிராம் எடையுடைய மனிதமூளையின் மாதிரி பொம்மையுரு (Model) வையும்,அதன் கோடி கோடி நரம்புகளின்படங்களையும் காட்டி, இவை இன்றி சிந்தனைசெய்ய இயலாது என்ற நிலையில், அண்ட சராசரத்தையும் ஆட்டிப்படைக்கும் ஆண்டவனுக்கு எவ்வளவு பெரிய மூளை இருக்க வேண்டும் என்று வினா எழுப்பினார். அவ்வளவு பெரியமூளை எனும் பொருள், அண்ட சராசரத்தில் எங்கும் இல்லை.

எப்படி அழகிய ரோசா போன்ற பொருள்கள் இன்றி அழகு எனும் புலனாகா சக்தி இயங்கமுடியாதோ, அவ்வாறே மூளைஎனும் பொருள் (a Coucrete object இன்றி, சிந்தனை எனும் புலனாகா சக்தி (an abstract Subject) இயங்க முடியாது. இதன் அடிப்படையில், சிந்தனை செய்யும் மேலான சக்தியாகக் கருதப்படும் ஆண்டவன் எனும் சக்தி இருக்க முடியாது என்று முடிவு செய்யப்படுகிறது. அன்று அறிவு வளரா ஆதி மனிதர் களால் கற்பனைசெய்யப்பட்டவைதாம் பல கடவுள் களும் என்றார்.

•

**இரண்டாம் பகுதி:** இத்தவறான நம்பிக்கை இன்னமும் பலரிடம் தொடர்வதற்கு மூன்று காரணங்களைக்கூறி னார்.(1) உயிர் அணுக்களின் குரோமசோம்கள்,அவற்றின் DAN, RAN ஜீன்களின்வழி, பல தன்மைகளும் முன்னோர் களிடமிருந்து வழித்தோன்றல்களுக்குத்தொடர்கின்றன- உடலின் வண்ணம் முதல், உள்ளத்தின் எண்ணம் ஈறாக. உயிர் அணுக்களின் படங்களைக் காட்டி இவற்றை விளக்கினார். அவ்வழி மூளை அணுக்களில் அமைந்த ஜீன்கள்வழி இத்தவறான கருத்தும் தொடர்கிறது-by Hereditory Transmission From Parents to the Progenies) (2) இளமை முதலே பலரும் இத்தவறான நம்பிக்கைவழி வளர்க்கப்படுகிறார்கள் — பள்ளியிலும், இல்லத்திலும். by Environment. (3) இவ்வாறு ஆழமாகப்பதிந்து போன இத்தவறானகருத்தை இவர்களால் எளிதில் விடமுடி வதில்லை.

**இன்றும், மனிதாபிமான உணர்வுக்கு ஒரு உதாரணம்கூறினார்**

'கிரௌஞ்சவதம்' எனும் காண்டேகரின் நெடுங்கதை யின் தினகரன், தெய்வங்களிடம் நம்பிக்கை இல்லாத் போதும், அவன் அம்மா அனுப்பிய கோயில் விபூதியைச் சூடிக் கொண்டது குறித்து கேட்டபோது அவன் கூறி னான்:

•

''அம்மா, தன்மகன்மீது கொண்டுள்ள பற்றும் பாசத்தோடும், கோயில்சென்று, தெய்வங்களை வணங்கி விபூதியை அனுபியுள்ளார். நீயோ சமஸ்தானத்து பெரிய சர்ஜனின் மனைவி என்பதையும் மறந்து, ஆற்றையும் கடந்து இவ்வளவு தூரம் நடந்துவந்து, இதைத்தந்துள்ளாய். எனக்குத் தெய்வங்களிடம் நம்பிக்கை இல்லை. ஆனால் அம்மாவின் அன்பின் மீதும், உன் மனிதாபிமான உணர்வின்மீதும் நம்பிக்கை இருக்கிறது. அவற்றை மதித்து இதைச் சூடிக் கொண்டேன்'' என்றான்.

இதே உணர்வுதான் தனக்கு என்றார் டாக்டர் K.N. கடவுள் ஒரு கற்பனை என்று கூறுவதிலும், மனிதாபிமானம் பழகப்பட வேண்டும் என்பதுதான் தன் தாரக மந்திரம் என்று கூறினார்.

**மூன்றாம் பகுதி** : மின்சார இரயிலில் பயணம் செய்தபோது தான் கண்ட பல உயர் பதவி வகிப்போரின் மதக்குறியீடுகள் அணிந்த முகங்களை விவரித்து, இந்த மதக்குறியீடுகளுக்கும் அவர்தம் அலுவலகப் பணிகளுக்கும் ஒரு தொடர்புமில்லை. இவர்கள் பலர்தென்னகஇரயில்வே அலுவலகத்தில் பணிபுரிவோராயினும் அவர்கள் சிறப்பாக பணிபுரியவில்லை என்பதற்கு அத்தாட்சியாக அதே பெட்டியில் உடைந்து கிடக்கும் இருக்கைகள், திறந்து கிடக்கும் மின்விசைப் பெட்டிகளைக் குறிப்பிட்டு, இவர்கள் பலரும் கபட நாடக வேஷதாரிகள் என்பதை எடுத்தியம்பினார்.

மருத்துவத் துறையிலும், பிற அறிவியல் துறைகளிலும் விளங்காத நிலைகளில் I don't konw(I.D.K.)என்று கூறாது அது ஆண்டவனின் திட்டமது (Teleological) என்று மழுப்பல் கூடாது என்பதற்குப் பல உதாரணங்களை விளக்கினார்.

கடவுள் ஒரு கற்பனை என்பதற்கு மற்றொரு ஆதாரமாக இந்த உலகில் மட்டும்தான் ஆண்டவன் வாழ்கிறார் — மனிதனால் கற்பனை செய்யப் பெற்றவர் என்ற காரணத்தினால் மனிதன் சென்று வந்த சந்திர மண்டலத்திலோ, அவன் ஆய்வு செய்த பல கோளங்களிலோ கடவுள் இல்லை.

பல மதங்கள் வழி, மதவெறியும் தோன்றி, பண்டைக் காலம் முதல் நடந்த, நடந்துவரும் பல மனித இனக் கொலைகளை எடுத்தியம்பினார்.

**நான்காம் பகுதி**: தன்னம்பிக்கையை இழக்கச் செய்வது மதம். இயலா நிலையில், ஆண்டவனை வழிப்படுங்கள் என்பது தவறு. இவ்வாறு சில மருத்துவர்களும் கூறுவது வேதனையளிக்கிறது. மாறாக, அறிவியல் வழி மேலும் முயன்று நலம் நாட வேண்டும் என்பதற்குப் பல உதாரணங்களைக் கூறினார். துணை ஜனாதிபதி திரு. நாராயணன் அவர்கள் இருதய அறுவை சிகிச்சை வழி தம் இருதய இரத்தநாள அடைப்பைச் சரி செய்து கொண்டது அறிவியல். அதன்பின் மேலும் நலம் பெற பலரும் தொழுகை செய்யவேண்டுமென்பது அறிவுடமை ஆகாது. எக்ஸ்பிரஸ் தினசரிக்கு இவ்வாறு எழுதிய தம் கடிதத்தைப் படித்துக் காட்டினார்.

தவறு செய்ய உதவுவதும் மதம். தவறான வழிகளில் உயர் பதவி பெற்றவர்கள், பெரும் பணக்காரர்கள், அரசியல் தலைவர்கள் ஆண்டவனுக்கு அளிக்கும் காணிக்கை வழி, தம் பாவங்கள் துடைக்கப்படும் என்று நம்புகிறார்கள்.

**ஐந்தாம் பகுதி** : இன்று தம் அடிப்படைக் கருத்தாம் மனிதாபிமானம் காக்கப்பட வேண்டும் என்பதை வலியுறுத்தி, தமிழிலும், ஆங்கிலத்திலும் உரை நிகழ்த்தினார்.

தம் முடிவுரைக்கு முன், தம் கருத்துக்கேற்ப, அறிஞர் அண்ணா அவர்களும், இறப்பதற்கு முன் தம்பிகளுக்கு எழுதிய இறுதிக் கடிதத்தில்.

''தம்பி, மனிதத் தன்மையிலேதான் முழுக்க முழுக்க நம்பிக்கை கொண்டிருக்கிறேன் மனிதத் தன்மை திகழ்ந்திடச் செய்வதினும் மகத்தானவேறோர் வெற்றி இல்லை என்றே கருதுகிறேன். அரசுகள் அமைவதே இந்த மனிதத் தன்மையின் மேம்பாட்டினை வளர்த்திடத்தான் என்று கருதுகிறேன். என்னால் எந்தப் பிரச்சினையையும் மனிதத் தன்மை கலந்ததாக மட்டுமே கொள்ள முடிகிறது. அதனால் கொடுமைகள் நேரிடும்போது குமுறிப் போகிறேன். அக்கிரமம் நடை பெறும்போது நெஞ்சில் வேல் பாய்கிறது.'' என்று எழுதியதை படித்துக்காட்டி, தம் கருத்தையே அண்ணா அழுத்தமாகக் கூறுவதை எண்ணியோ, தனக்குப்பிடித்தமான ஒரு தலைவர் இன்று நம்மிடையே இல்லையே என்ற வேதனையாலோ நெகிழ்ந்து போனார்.

## ஆய்வு எட்டு

## ''நம்மை நாமே அழித்துக் கொள்ளுதல் கூடாது''

என்ற தலைப்பில், மக்களுக்கு தோன்றும் இடர்ப்பாடுகளை இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம் என்றார்.

**முதல் பிரிவு :** புயல், பூகம்பம் போன்ற இயற்கைச் சீற்றங்கள், தொத்து நோய்கள், எதிர்பாராத ஆபத்துகள் முதலியன. இவற்றையே நாம் அறிவியல் வழி தடுத்துக் கொள்ள முயலுகிறோம்.

**இரண்டாம் பிரிவு :** நமக்கு நாமே இடுக்கண் விளைவித்துக் கொள்ளுதல், நாட்டுவெறி, இனவெறி, மொழி

வெறி இவற்றினும் கேடான மதவெறிவழி மனிதன் மனிதனையே மாய்த்துக் கொள்கிறான். சுயநலக் காரணத்தால் நிகழும் களவு, கொலை, கற்பழிப்பு முதலியவற்றையும், ஆதிமுதலே மனிதாபிமானம்கற்பிக்கப் படுதல் வழி தவிர்க்கலாம் என்றார்.

சீராக சிந்தனை செய்யாமையால் நிகழும் தற்கொலை களைத் தவிர்ப்பது குறித்தும் பேசினார்.

கடைசியாக, தினசரி வாழ்க்கையில், நமக்கு நாமே, நம்மவர்க்கு நாமே துன்பம் அளித்துக் கொண்டு வேதனை யுறுவதை விளக்கி, இவற்றைத் தவிர்க்க என, தம் பத்துக் கட்டளைகளை அச்சிட்டு வழங்கினார்.

### ஆய்வு ஒன்பது

## முன்பிறவி, மறுபிறவி, ஆத்மா

குழந்தைகளின் தன்மைகள் பலவும், தம் பெற்றோர் வழி வருவன என்பதற்கு, மனிதர்களிடையே தினசரி காணப்படும் பல அமைப்புகளைக்கூறி இவற்றிற்கு அறிவியல் வழி ஆதாரங்களை விளக்கினார்.

உயிர் அணுக்களின் குரோமசோம்களின் அமைப்பு, ஆண் அல்லது பெண் கரு, Male or female sperm வழி கலவியுற்ற கரு (Fertilised ovum) தோன்றி அது ஆண் அல்லது பெண் குழந்தையாக உருவெடுத்தல் முதலிய வற்றைப் பல படங்கள்வழி விளக்கினார்.

இக் கருத்துகளில் அமைந்த குரோமசோம்களின் RNA DNA வழிதான் மூதாதையரின் தன்மைகள் பலவும் வழித் தோன்றல்களுக்கு வருகின்றன.

இதன் அடிப்படையில், மூளையின் நினைவுப்பகுதி தூண்டப்பெற்று மூதாதையரின் வாழ்வினை நினை

வுறுத்துவதாக சில சமயம் அமையும் என்பதைத்தான் அவர் உயிரே தன் வழித் தோன்றலுக்கு வந்துள்ளது (Reincarnation)— மறுபிறவி என்று தவறாகக் கூறுவர் என்றார்.

பிறந்த குழந்தை பிறந்தஅன்றேகூட, தூக்கத்தில் சிணுங்குவதும், சிரிப்பதும் இதே அடிப்படையில்தான். தன் பேரக்குழந்தை ஒன்று இவ்வாறு சிரிக்கும் படத்தைக் காட்டினார்.

உயிர் என்றால் என்ன? உயிர் போதல் என்றால் என்ன? என்பதை விளக்கியபோது, மறுபிறவி இருக்க முடியாது என்பதற்கு மேலும் ஆதாரம் கிடைத்தது.

ஆத்மா என்றால் என்ன? என்பதையும் விளக்கினார். ஒருவர் வாழ்ந்தபோது, அவர் கொண்ட கருத்துகள் மனநிலை முதலியவையே அவர் ஆத்மா. அவர் மனம் அவர் இறந்தபோது, அதுவும் முடிவுக்கு வருகிறது. அவர் ஆத்மா என ஒன்றும் தனித்து இயங்குவதில்லை, அவருக்குப்பின் வாழ்வோர் மனதில் அல்லால், என்பதையும் விளக்கினார்.

### ஆய்வு பத்து

## பேய் பூத இரவு (Holloween)

நம் நாட்டில் மட்டுமல்ல, அமெரிக்கா போன்ற வளர்ச்சியுற்ற நாடுகளிலும் மூடநம்பிக்கைகள் மிகுந்து உள்ளதற்கு உதாரணமாக அங்கு அனுசரிக்கப்படும் பேய், பூத இரவு குறித்துப் பேசினார்.

நாம் சாம்பல் பூசணியை, பேய் பூதமென அலங்கரித்து தொங்கவிடுவது, அல்லது பலி இடுவது போலவே அங்கு சிவப்பு பூசணியின் உட்பகுதியை அகற்றி அதன் ஓட்டினை, பூதமென வெட்டி எடுத்து உள்ளே ஒரு மின்

விளக்கு அமைத்து, வீட்டுமுன் தொங்கவிடுகிறார்கள்! இரவில் பார்த்தால், வீட்டைக் காக்கும் பூதமெனத் தோன்றும்.

நவம்பர் ஒன்றாம் தேதி, நம் குரு பூஜை தினங்கள் போல் மறைந்த மதத்தலைவர்கள் தினம் (All saints' day) முன் இரவு, பேய் பூத இரவு. அன்று குழந்தைகளும் பேய் பூதமென வேடமிட்டு உறவினர், நண்பர் வீடுகளுக்குச் சென்று பயமுறுத்தி நடிப்பர்.

நம் நாட்டில் உள்ளது போலவே அங்கும் பல மூட நம்பிக்கைகள் உள்ளதை எடுத்துக் கூறி இவற்றை எல்லாம் என்றுதான் தவிர்ப்பது? என்று கேட்டு, அறிவியல் வழி மட்டும் நடப்போமே என்றார்.

## ஆய்வு பதினொன்று

## விதி

அவ்வப்போது நிகழ்ந்த சில நிகழ்ச்சிகளைக் கூறி இங்கெல்லாம் விதி விளையாடியதாகக் கூறுவதை எடுத்தியம்பி, விதி என்றால் என்ன? அதை யார் இயக்குவது? ஆண்டவனா, அவனுக்கும் மேலானதா இது, என்பன போன்ற பல வினாக்களை எழுப்பினார். உலகில் சிலர் நலமாக இருப்பதற்கும், வேறுசிலர் கேடுவிளைவிக்காத போதும், இன்னல்களுக்கு ஆளாவதற்கும் என்ன காரணம்? முன் பிறவியில் அவன் செய்த பாவம் என்பார்கள். முன்பிறவி என்பது சரி அல்ல. அப்படி இருந்தாலும் அப்பிறவியிலும் அவனை ஏன் பாபங்கள் செய்யவைத்தார் அந்த ஆண்டவன்? ஆண்டவனால் ஆட்டிப் படைக்கப்படுபவன் மனிதன். சதுரங்க ஆட்டத்தில் அவன் ஒரு பொம்மை. அதைத் தவறாக ஆடியவன் ஆண்டவன். அதற்கு, ஆடப்பெற்ற பொம்மையை— மனிதனை பழிப்பானேன்.

நெருப்பு, காற்று, புயல் போன்ற இயற்கை சக்தி களின் தன்மைகளையும், சிலரசாயன கலவைகளின் நியதி களையும் கூறி, அவை அவற்றின் விதி என்பது சரி. இவற்றின் விதியை யாரும் தீட்டவில்லை. இவற்றை அறிவியல் வழி ஆய்வுசெய்து மனித நலனுக்கே பயன் படுத்துவது அறிவுடைமை என்றார்.

ஆய்வு பனிரண்டு

•

## அற்புதங்களும் அவதாரங்களும்

“எங்கள் பேரவைக்கு வாருங்கள். இங்கே குருடர்கள் பார்க்கிறார்கள். செவிடர்கள் கேட்கிறார்கள் சப்பானி யர்கள் நடக்கிறார்கள். உங்கள் குறைகளையும் போக்கு வார் எம்பெருமான். தம்வேதம் ஓதுதல்வழி, அவர்தம் கரம்பட்ட புனிதநீர் தெளித்தல் வழி” என்னும் விளம் பரங்களைக் கூறி, பல மதக்காரரர்களின் அவதாரங்கள் குறித்தும் அவர்கள் புரிந்ததாகக் கூறப்படும் அற்புதங்கள் குறித்தும் நீண்ட உரையாற்றினார். கண்ணொளி தருவ தாக் கூறப்படும் பெருமான், கண்ணாடி அணிந்திருப்பதன் முரண்பாட்டை எடுத்தியம்பினார்.

அற்புதங்களையும் அவதாரங்களையும் ஒரு அட்ட வணை வழி சுருக்கமாக: விளக்கினார்.

1. கடவுள் அவதாரங்கள் (Godsmen) கற்பனைகள்.

2. அவதார புருஷர்கள் (Saints apostles) பலரும் கற்பனைகள். சிலர் சரித்திர புருஷர்களாயினும், இவர்கள் ஆற்றியதாகக் கூறப்படும் அற்புதங்கள் கற்பனை அல்லது ஏமாற்று வேலைகள். இன்றும் சிலர் இவ்வாறு ஏமாற்று வேலைகள் செய்து வருகிறார்கள்.

3. அவதாரங்களின் சிறப்பை உயர்த்தவும், மக்களுக்கு பயத்தை அளிக்கவும் கற்பனை செய்யப்பெற்ற அசுரர்கள் (Evilmen).

4. இவர்களைப் போலவே, நிஜவாழ்க்கையிலும் [illegible] தந்திரங்கள் வழி கேடுவிளைவிக்கும சூனியக் காரர்கள்.

இவர்களுக்கு மாறாக கண்கட்டுவித்தை செய்யும் தந்திரக்காரர்கள் (Magicias) வியக்கத்தக்க வேடிக்கைக் காட்டுவர். இப்படித்தான் அவதார புருஷர்கள் நம்மை ஏமாற்றுகிறார்கள் என்று கூறி, விளக்கம் கூறுவர், என்றார்.

இயற்கையின் நிகழ்ச்சிகள் சிலவற்றையும், ஆண்டவனின் அற்புதங்கள் என வியந்திடவேண்டியதில்லை. அவை அனைத்திற்கும் அறிவியல் விளக்கம் அளிக்கும். அறிவியல் வழியில்தான் மனித இனம் முன்னேற்ற மடைந்து வருகிறது. அற்புதங்களையும் அவதாரங் களையும் புறக்கணித்து அறிவியல் வழி மனித இனம் மேலும் நலமுற முயல்வோம் என்றார்.

## ஆய்வு பதின்மூன்று

## மனிதாபிமானம்

**முதல்பகுதி**

மனிதாபிமானம் காக்கப்பெற்ற அல்லது மறுக்கப் பெற்ற சில நிகழ்ச்சிகள்.

1. கார் துடைத்த சிறுவனுக்குத் தாத்தா காசு தரவில் லையே என அவனைக் கனவிலும் கண்டு கலங்கிய பேரன் தீபுவின் மனிதாபிமான உணர்வு.

2. வயதுற்ற மூதாட்டிக்கு சிறுமி அம்மு காசு தந்தபோது அவர்தம் கரம் நீட்டி அவள் கரத்தில் முத்த மளித்தபோது எழுந்த உள்ளக் கிளர்ச்சி.

3. ஒரு பல்லவன் பஸ் ஓட்டுனரும், நடத்துனரும், பெரியவர் ஒருவர் பேருந்தைப்பிடிக்க ஓடி வருவதைக் கண்டும், அவரை ஏற்றிக்கொள்ளாது சென்ற மனிதாபிமானமற்ற நிகழ்ச்சி.

4. இரண்டாம் உலகப்போரின் இறுதிக்கட்டத்தில், ஒகினாவா பகுதியில் ஒரு ஜப்பானிய போர்வீரனுக்கும், அமெரிக்கப் போர்வீரனுக்குமிடையே நிகழ்ந்த நிகழ்ச்சியை விவரித்து, 40 ஆண்டுகளுக்குப்பிறகும் அவர்கள் நண்பர்களாகச் சந்தித்துக் கொண்ட மனிதாபிமானம் நிறைந்த நிகழ்ச்சி.

இவ்வகை உண்மை நிகழ்ச்சிகளைக்கூறி எவ்வாறு மதவெறி இனவெறி நாட்டுவெறிகள் வழி மனிதாபிமானம் மறுக்கப்படுகிறது என்றும் அண்ணா கூறியதே போல் மனிதாபிமான உணர்வை மட்டும் அனைவரும் ஏற்றுக் கொண்டால் மனித இனம் வேதனை இன்றி நலம் பெறும் என்றார்.

## ஆய்வு பதினான்கு

## மனிதாபிமானம்

### இரண்டாம் பகுதி

இரண்டாம் உலகப்போர் சமயம் மதவெறி பிடித்த ஜர்மானியர்கள் பல கோடி யூதர்களைக் கொலை செய்தது குறித்து அன்னி பிராங்க் (Anne Frank) எழுதிய தினக் குறிப்பையும்;

இன்றும், லிபியாபோன்ற அரபுநாடுகளின் மதவெறிச் செயல்களையே அவர்கள் நடத்தும் மதப்போர் என்று கூறுவதையும் (Holy war), கருஏற்கச் செய்த தன் காதலியையே போர் ஆயுதமாக்கி, அவளையும் சேர்த்து 388 பேர் செல்ல இருந்த எதிரிநாட்டு விமானத்தை அழிக்க இருந்த

நிகழ்ச்சியையும் கூறி. இவற்றிற்கெல்லாம் முடிவே இருக்காதா?டைனாசரஸ் இனம் அழிந்து போனதுபோல மனித இனமும் அழிந்து போகவேண்டுமா? அவ்வாறு நிகழா திருக்க உலக நாடுகள் அனைத்தும் தோழமை நாடுகளாக வாழ வழிவகுக்க மாட்டார்களா? யு.என்.ஓ. (U.N.O.) போன்ற உலக அரங்குகள் திட்டங்கள் தீட்டாதா என்று தம் விருப்பத்தை வினாக்களாக்கினார்.

## ஆய்வு பதினைந்து

## *மாந்தளிர்*

ஒரு நாள், தம் தோட்டத்துமாமரம் முழுமையும் இளந்தளிர்களாகக் காட்சி அளித்ததை வர்ணித்து, அவை முழுமையும் அடுத்த சில நாட்களில் புழுக்கள் அரித்து கொட்டிப் போனதைக்கண்டு வேதனையுற்றதைக் கூறினார். இது,மாமரத்தை மலரச் செய்து,அவை மொக்கு களாக உள்ள போதே, இளம்பிஞ்சுகளாக, உள்ளபோதே அழித்து விடுவதைப் போல் இருக்கிறது. இவ்வாறு இவற்றை அழிப்பது கருவை அதன் தொடக்கநிலை யிலேயே அழிப்பது போல் இருக்கிறது. அது சரியான குடும்பக்கட்டுப்பாடு முறையாகாது என்றார்.

இதற்கு உதாரணமாக: ஒரு அமெரிக்க நாட்டு மூதாட்டி, தான் இரண்டாம் முறை கருத்தரித்தபோது, அவர் உடல் நிலையை எண்ணி டாக்டர்கள் கருவை கலைத்துக்கொள்ள ஆலோசனை கூறியபோதும் மறுத்து விட்டு, சிரமத்தோடே மகனைப் பெற்றார். அவன் பின்னர் அமெரிக்க நாட்டில் பெரும்பதவி வகித்தான். ஒரு நாள் தன் அன்னையைக் கேட்டபோது அவர் கூறினா ராம். I didnot want to destroy you my dear. I wanted to know what you are, what you are going to be என்று அரசாங்கமே அனுமதித்தாலும் கருவைக்கலைப்பதைச்

செய்யாது கருஉண்டாகாதுபார்த்துக் கொள்வதுதான் சரி யான குடும்பக் கட்டுப்பாடு திட்டம். கருவாக அமைந்த பின்அதைக்கலைக்கும் நிலையில் அது தன் தாயிடம் கீழ் கண்டவாறு பேசுவதாகக் கற்பனை செய்யச் சொன்னார்.

''அம்மா, நான் என்ன கேடு செய்தேன் அம்மா. நான் யார் என்று நீ உணருமுன்னே என்னைப்படைத்த நீயே அழித்திட திட்டமிடுவது சரியா அம்மா, அந்த மூதாட்டி யின் மகனைப் போலவே நானும் ஏதேனும் சாதிக்கக் கூடும். என்னை அழிக்காதே அம்மா.''

மாந்தளிர் குறித்த பிற கருத்துகள் : இப்படி இளந் தளிர்களையே அழிப்பதை ஆண்டவனின் கிறுக்குத்தனம் என்று கூறுவோம். இதன் அடிப்படையிலும் ஆண்ட வனை மறுக்கலாம். ஆனால் இது ஒரு இயற்கையின் அமைப்பு. நாம் தினம் தினம் பலகோடி முட்டைகளையும் ஆடுமாடுகளையும் அழித்து, காய்கறிகளைப்பறித்து சமைப்பது போல, புலி மானைக் கொல்வது போல, பூனை எலியைப் பிடிப்பது போல.

மாந்தளிர் அழியக்கூடாது, மாம்பூக்கள் பாழாகக் கூடாது என்று முன் கூட்டியே மருந்து தெளிக்கவேண்டும்.

### ஆய்வு பதினாறு

## அறிவியலும் சமுதாயமும்

அறிவியல் வழிதான் மனித சமுதாயம் பல துறை களிலும் முன்னேற்றமடைந்து வருகிறது.

கம்ப்யூட்டர் வளர்ச்சியை திரு. செந்தில் இயக்கிக் காட்டினார்.

ஆனால் அறிவியலைப் பல அழிவு வேலைகளுக்கும் பயன் படுத்துவதால், மதத்தலைவர்கள் அதைப்பழிப்பர். அறிவியலைப் பழிக்கக் கூடாது. அதே மதவெறி

கொண்டும், நாட்டுவெறி கொண்டும் சிலபல போராளிகளும், சுயநல வாதிகளும் அதைத் தவறாக உபயோகித்து மனித இனக் கொலை செய்கிறார்கள். இவர்களுக்குத்தான் தங்கள் தவறை உணர்த்தி மனித நலனுக்கு மட்டும் அறிவியலைப் பயன்படுத்தச் சொல்ல வேண்டும்.

### ஆய்வு பதினேழு

## மங்கலம் என்ப மனைமாட்சி

மங்கலம் என்றபோது வள்ளுவர், கணவனோடுவாழும் இந்துப் பெண்கள் இடும் பூவையும், பொட்டையுமோ, அல்லது மஞ்சள் கயிற்றோடு சூடும் மங்கல நாணையோ வள்ளுவர் குறிப்பிடவில்லை. சிறப்பான குடும்பம் நடத்துவதையே குறிப்பிடுகிறார். மாங்கல்ய பூஜை செய்து அதைக் கண்களில் ஒற்றிக் கொள்ளுதல் வழி கணவன் நலமாக வாழமாட்டான். இல்லற வாழ்வில் துன்பம் அளிக்காது, அவனுக்கு இன்பம் அளித்தல் வழியே தான் நெடுங்காலம் வாழவைக்க இயலும். அவ்வாறே கணவனும் இயங்கவேண்டும்.

இம் மங்கல அணிகள் முதலில் பெண்களுக்கு மங்களம் அளிப்பதாகக்கூறி, கணவன் மறைவுக்குப்பின் அவற்றை அகற்றச் செய்வது, சில சமூகத்தார் தலைமுடியையும் மழிக்கச் செய்வது பெண்களுக்கு அளிக்கும் அநீதி.

கணவன் உள்ளபோது அவற்றோடு இருப்பதும், மறைந்தபோது அவற்றை நீக்குவதும் அவளுக்குப் பாது காப்பு அளிக்கும் என்பதும் பெண்களை இழிவுபடுத்துவது ஆகும்.

இவற்றுள் முக்கிய இடம்பெறுவது பொன்னாலான தாலி. இது மட்டுமல்ல, மற்ற பொன் ஆபரணங்கள் தாம் எதற்கு? இவற்றின் வழி பல கேடுகள், பெண் எரிப்பு,

கள்ளக் கடத்தல் முதலியன. பொன்னுக்கென தனி மதிப்பு மிகக் குறைவு. எனவே உலகப் பொருளாதாரத்தையே இதைவிட்டு வேறு வழிகளில் அமைக்கவேண்டும்.

விபூதி அணிவதும் வேண்டாம். அதிலும் பெண்கள் இடும்போது முதலில் மங்கலம் மிகும் என்பர். பின்னர் அதுவே அமங்கலத்தை அதிகமாக்கும். ஏனோ விபூதிக்கு இந்த இரட்டை வேடம்.

## ஆய்வு பதினெட்டு

## இல்லற அமைப்பில் புதிய திட்டம்

புதுமணப் பெண்கள் சிலர், பல இன்னல்களுக்கு ஆளாவதற்கும் சில சமயம் எரிக்கப்படுவதற்கும், தூக்கில் தொங்கப்படுவதற்கும் காரணம்,புதுமணப் பெண்ணோடு கணவன் நன்கு பழகுமுன்பே, அவளைக் கணவன் வீட்டில் இருக்கச் செய்வதாகும். இதைத் தவிர்க்க திருமணமானபின் முதலில் கணவனோடு பெண் வீட்டி லேயே சுமார் ஆறுமாதங்களுக்கு வாழட்டும். இச்சமயம் தாய்மை ஏற்றால் மேலும் சிலகாலம் நீட்டிக்கலாம். பிறகு அவர்கள் வசதிப்படி.

திருமணம் செய்வதும் இருவீட்டாரும் கலந்து செலவு செய்வதாக இருக்க வேண்டும். எளிய திருமணம் போதும். மனம் ஒன்றுபடுவதேபோதும். மாங்கல்யம் அவசியமில்லை. நாட்டு சட்டத்திற்கேற்ப பதிவு செய்து கொள்ளட்டும்.

கன்னிகாதானம் என்பதே, அவளை ஒரு விலை பொருள் எனக் கருதி, அதை தானமாக அளிப்பதாக இருக்கிறது. திருமணப்பத்திரிகைகளிலும் இவ்வாறு குறிப்பிடக்கூடாது.

திருமணத்திற்குப்பின், மனைவி மட்டும் தன் கணவன் பெயரைச் சேர்த்துக் கொள்ள வேண்டுமா? பிறக்கும் குழந்தைகளுக்கும் தகப்பன் பெயர் முன்பாக வேண்டுமா? வேண்டுமாயின் அம்மா, அப்பா இருவர் பெயரும் இருக்கட்டும்.

இத்திட்டத்தை உலகில் அனைவரும் ஏற்றுக் கொள்வது நல்லது.

### ஆய்வு பத்தொன்பது

## பிறப்பும் இறப்பும் ஒரு சிந்தனை

மனித உயிர்அணுவின் படம் காட்டி அதன் 44+xx அல்லது 44+xy குரோமசோம் குறித்து விளக்கினார். கலவியுறும் உயிர் அணுக்களில் இவை இரண்டாகப் பிரிந்து பின்னர் ஆண் — பெண் கலவிச் சமயம் 22+xம், 22×yம் என இணைந்து ஆண் கருவாகவோ 22+xம் 22+x என இணைந்து பெண் கருவாகவோ கலவியுற்ற அணுவாக அமைகிறது. அப்போதே ஒருஉயிர் தோன்றிவிட்டது என்று கூறலாம். கலவியுற்ற இம்முதல் "கருஅணு" பல அணுக்களாகிதாயின் கருப்பையில் வளர்கிறது. 7-8 மாதங்களில் அது தனித்து வாழும் நிலை அடைகிறது. எனினும் பொதுவாக 9 மாதங்கள் கடந்த பிறகே முழு வளர்ச்சியுற்ற குழந்தையாகப் பிறக்கிறது. 7-8 மாதத்தில் பிறந்த போதும் தனித்துவாழ இயலும். ஆனால் சிரமம்.

உடலில் இருதயம் முதல் முக்கிய உறுப்புகள் அனைத்தும் ஒருங்கு இயங்கும்போது உயிர்உண்டு என்போம். இவற்றின் கூட்டு இயக்கம் நின்றதும் உயிர் போயிற்று என்போம். திடீரென ஒரு முற்றுப்புள்ளி. அப்போதும் ஆவி வடிவில் எதுவும் உடலை விட்டுப் பிரிவதில்லை. மேலும் சில உறுப்புகள் வாழக்கூடும். உடனே மாற்று உடம்பில் அமைத்தால், அவ்வுடம்பிலும் மேலும் பல காலம்இயங்கும். அவையிருந்தஉடலை பொருத்த அளவில் இறந்து விட்டார் என்போம்.

ஒரேபிரசவத்தில் ஒன்றுக்கும் அதிகமான குழந்தைகள் பிறப்பது எப்படி? ஆண் கருவையும் பெண்கருவையும் வெளியே எடுத்து, சோதனைக்குழாயில் கலவியுறச்செய்து சில காலம் வளர்த்து பின்னர் மனைவியின் கருப் பையிலோ, அதுசரியாக இல்லாதபோது வேறுபெண்ணின் கருப்பையிலோ (Surrogate) வளர விடுவது குறித்தெல் லாம் விளக்கினார்.

தங்கள் குழந்தைகள் வழி பெற்றோர்தம் உயிர் அணுக்களைத் தொடர்கிறார்கள். ஆனால் அவர்கள் உயிர்கள் அவர்களோடு முடிகிறது. ஆக, உயிர் அணுக்கள் தொடர்கின்றன உயிர் தொடர்வதில்லை.

## இருபதாம் ஆய்வு

## *தீராத வினையெல்லாம்...*

If it is He who heals
Who then begets the Evils?

என்பது சிறப்பான வாசகம் என்பதை விளக்கத்தோடு முன்னுரையாகக் கூறி, பல உண்மை நிகழ்ச்சிகள் வழி அதை நிரூபித்தார்.

குழந்தையின் வாயில் ஓட்டை... அதைத்தன் விரல் கொண்டு மூடி, பால் குடித்ததைக்கண்டு வியந்தார் ஒரு மருத்துவப் பேராசிரியர். அவருக்கே சிறு நீரில் இரத்தம். திருப்பதியானை வேண்டியபோது நின்றதாம். அது அவன் கருணை என்றார். அவ்வாறே திரு. நீலம் சஞ்சீவி ரெட்டி அவர்களின் சுவாசப்புற்றுநோய் அறுவை வழி அகற்றப்பெற்றபின், பாலாஜி கருணைவழி சரியாயிற்று என்று வணங்கி வந்தார். ''இரணத்தை நான் சுத்தம் செய்கிறேன். கடவுள் குணப்படுத்துவார்'' (I dress God heals) என்று சில அறுவை மருத்துவர் கூறுவர்.

இவர்கள் அனைவருமே ஆண்டவன் எனும் கற்பனையில் மூழ்கியவர்கள். நோய் நிலைகள் எவ்வாறு உண்டாகின்றன? அவற்றை எவ்வாறு சரி செய்யலாம் என்பது மருத்துவ அறிவியல். ஆண்டவன் குணப்படுத்துவானாயின் அவன் ஏன் முதலில் வியாதியை அளித்தான். இக்கேள்வியை இவர்கள் கேட்டுக் கொள்வதில்லை. அனைத்தும் இயற்கையின் சிலபல பௌதிக ரசாயன மாறுதல்கள்வழி (Various Immune mechanism). இவற்றை உணர்ந்து சிறப்பாகப் பயன் படுத்துவது நம் கடமை. அதைவிட்டு அனைத்தும் ஆண்டவன் வழி என்பதாயின் பல மருத்துவமனைகள் ஏன்?

## ஆய்வு இருபத்தி ஒன்று

## *சிந்தனையைத் தூண்டிய சில நிகழ்ச்சிகள்*

1. **தலைவெட்டி முனியப்பன் :** சேலத்தில் உள்ள புத்தர் போன்ற ஒரு சிலை. முதலில் **ஜயினக்கடவுள்** என்று அமைத்த அதை யாரோ அதன் தலையைவெட்டி விட்டார்கள். பிறகு வேறு சிலர் தலையை ஒட்டவைத்து மீண்டும் முழுச்சிலை ஆக்கியபோது **தலைவெட்டப்பட்ட சிலை** ஆயிற்று. இதற்கு ஆடு, கோழிகளை பலியிட்ட காரணத்தால் **தலை வெட்டும் முனியப்பன்** ஆயிற்று மீண்டும் **அதை புத்தர் எனக்கூறி புத்தர் ஆலயம்** அமைத்தார்கள். இன்று அதை யாரும் தொழுவார் இல்லை. இவ்வாறு உருவமாற்றம் பெற்ற சிலையை விவரித்து,

> ''ஆண்டவனை ஆக்கலும் காத்தலும் நம் தொழில்
> அவர்தம் வாழ்வும் தாழ்வும் நம்கையில்'' என்றார்.

2. **பாழடைந்த ஊர்**

பல காலமாக மழை இன்றி, உணவு இன்றி வாடிய மக்கள் ஆண்டவனைத் தொழுது நின்றார்கள். ஒரு

சமதர்மவாதி, ''ஊரில் சிலரிடம் மட்டும் குவிந்து கிடக்கும் தானியங்களைப் பங்கிட்டுக்கொண்டால், யாரும் பட்டினி யால் இறக்க வேண்டாம்'' என்றான். அவன் கருத்தை ஏற்காத சிலர் அவனைக் கொன்றுவிட்டார்கள். ஒரு பகுத்தறிவு வாதி ''தெய்வம் மழை அளிக்காது. நாம் நம் தோள் வலிமை கொண்டு தூரத்தே ஓடும் ஆற்று நீரைக் கால்வாய்வழி கொண்டு வந்தால் வாழலாம்'' என்றான். அவன் கருத்தையும் ஏற்காது அவனையும் கொன்று விட்டார்கள். தொடர்நது மழை இன்றி பலரும் இறந்து போனார்கள். இன்று புதைக்கப்படாத பிணங்களைத் தின்று எலும்புகளைக் கோபுரத்தில் மேலிருந்து போட்டு அத்தெய்வத்திற்குக் கழுகுகள்தான் அபிஷேகம் செய் கின்றன.

காண்டேகரின் இக்கதையின் வழி நம்மை சிந்திக்கச் செய்தார்.

## ஆய்வு இருபத்தி இரண்டு

# ஒரு வழிப்பாதை இரு வழிப்பாதை

கற்பனையாம் கடவுளுக்கு நன்றி கூறுமாறு, தனக்கு நலம் அளித்த Dr.K. N. Rao அவர்கள் கூறக் கேட்டபோது, அது கடவுளுக்கு அளிக்கும் ஒரு வழிப்பாதை வணக்கம். மாறாக ராவ் அவர்களுக்கும், தன்உடல் நலம் காத்த மற்ற மருத்துவர்கள், செவிலியர் போன்றாருக்கும் நன்றி கூறுவது சிறப்பான இருவழிப்பாதை. நன்றி கூறுபவனும் கூறப் பெற்றோனும் அன்பினைப் பரிமாறிக் கொள் கிறார்கள். இக்கருத்து தன் எண்ணத்தில் எழுந்தபோது பிற ஒருவழிப்பாதைகளும் இருவழிப்பாதைகளும் நினை வுக்கு வந்தன என்றார்.

மனிதாபிமான உணர்வோடு மக்கள் தங்களுக்குள் உதவிக்கொள்வது சிறப்பான இருவழிப்பாதை. அதை விட்டு ஆண்டவனுக்கு காணிக்கை செலுத்துவதும் அவனுக்குத் திருமணம் செய்து வைப்பதும் ஒருவழிப் பாதை. மக்கள் திருமணங்களும் சிறப்பான இருவழிப் பாதையாக அமையவேண்டும். பெண் வீட்டார் மட்டும் பொருள்கள் அளிப்பதாகக்கூடாது. கணவன் மனைவி தொடர்பும் சிறப்பான இருவழிப்பாதையாக அமைய வேண்டும், அன்பு செலுத்துவதிலும், பால் உணர்வு பரிமாற்றத்திலும்.

வேறு சிறப்பான இருவழிப்பாதைகள்: ஆசிரியர் மாணவர், கடன் தந்தார்- கடன் பெற்றார், மத்திய அரசு மாநில அரசு, தொழிலாளி- முதலாளி.

## ஆய்வு இருபத்தி மூன்று

## *மங்கையரின் மார்பகமும் மகேசனின் மகிமையும்*

முதலில், பாமரமக்கள்,ஆண்டவனின் திரு உள்ளத்தை வியப்பதாக அமைந்த பல மாறுதல் பெறும் மார்பகத்தை விளக்கினார்.

அடுத்து, இளநிலை மருத்துவ மாணவர்களும், இம் மாறுதல்களுக்கானப் பல ஆர்மோன்களை இயக்கும் ஆண்டவனை வியப்பதாகக் கூறினார்.

தாய்ப்பால் சுரப்பதற்கான பல ஆர்மோன்களைக் கூறி அவ்வழி குழந்தைக்குத்தாய் பால் மட்டும் ஆறு மாதங்களுக்கேனும் அளிப்பது நல்லது என்றார்.

தொட்டனைத் தூறும் மணற்கேணி— சேயின்வாய்
தொட்டணைத்தூறும் தாய்ப்பால்

என மாற்றி அமைத்த திருக்குறள் இதற்கு அறிவியல் விளக்கம் அளிக்கும் என்றார்.

அடுத்தகட்டமாக, துருவித்துருவி ஆய்வு செய்யும் முதுநிலை மருத்துவ மாணவன், மார்பகத்தின் சிறப்புகளுக்கும் ஆண்டவனுக்கும் ஒரு தொடர்புமில்லை. தொடர்புபடுத்துவதாயின், வேதனை அளிக்கும் பல மாறுபட்ட நிலைகளுக்கு ஆண்டவன் விளக்கம் அளிக்கமாட்டான். மாறாக அறிவியல் வழி பல வற்றிற்கும் விளக்கம் பெறலாம். நலம் நாடலாம் என்றா .

இன்றய ஆய்வு தொடக்கத்தில்,

அன்று மட்டுமல்ல,இன்றும் மதவெறி மக்களை மாய்த்து வருவதற்கு செக்கோசலாவியா பகுதி சர்பியாநாட்டில் பல லட்சம், மக்கள் கொல்லப்படுவதைக் கூறி, அதற்கு உதாரணமாக **அட்மிரா, பாஸ்கோ** எனும் இளம் காதலர்களின் சோகக்கதையையும் கூறி அவர்களின் சவக்குழியில் கைப்பிடி மண்போட்டு நிற்கும் அன்னையைப் படம் பிடித்தது அனைவரையும் நெகிழச்செய்தது.

### ஆய்வு இருபத்தி நான்கு

## ஆண்டவனற்ற அறிவியல்

அறிவியல் வழிதான் மனித சமுதாயம் பல துறைகளிலும் முன்னேற்றமுறுகிறது என்பதைக்கூறி, பல மருத்துவ நிலைகளையும் உதாரணமாகக் கூறினார்.

ஒரு அமெரிக்கச்சிறுவன், ஒரு ஆங்கிலச் சிறுவன், இவர்களின் மூளையின் ஆழப்பகுதியில் ஆபத்தளிக்கவல்ல கட்டிகள். இவற்றை எவ்வாறு அறிவியல் ஆய்வு செய்து அகற்றினார்கள் என்பதை எடுத்தியம்பினார்.

தம்வாழ்வில் நிகழ்ந்த சில ஆபத்து மருத்துவ நிலைகளி லும் அறிவியல் மட்டுமே நாடியதையும் விவரித்தார்.

பேராசிரியர் ஸ்டீபன் ஆக்கிங் சிறந்த கணித இயல் ஆய்வாளர். தனக்கு மிகக்கொடிய வியாதி இருந்தும் மனம் தளராது, பல வானவெளி உண்மைகளை ஆய்வு செய்தார். அதற்கு உதவியது அவரின் சிந்தனை செய்யும் அறிவியல் சக்தி மட்டுமே: ஆண்டவனை அவர் என்றும் நம்பியதில்லை, நாடியதில்லை.

உலக நலன்நாடி, சுற்றுப்புற சூழலை முறையாக அமைக்கப் பல உலகத்தலைவர்களும் ரியோடிஜெனிரோ வில் ஒருங்குகூடி அறிவியல் ஆய்வு செய்தனர். அது சரி, இதேசமயம் சில மதத்தலைவர்களும் ஒருங்கு கூடி யாகம் வளர்த்தனர். அது சரியல்ல. யாகத்து புகை சுற்றுப்புற சூழலையே மேலும் கெடுக்கும்.

மழையற்ற நிலையில் குடிக்கத் தண்ணீர் கிடைக்கும் பகுதியை நாடிச்சென்ற மாட்டின் அறிவியலையும் வானத்தை நோக்கி ஆண்டவனைத் தொழுது நிற்கும் சில விவசாயிகளின் அறிவியலற்ற செயலையும் வெளியிட் டிருந்த இந்து பத்திரிகையின் படம்,இன்றைய தலைப்புக்கு நல்ல உதாரணம்.

## ஆய்வு: இருபத்தைந்து

## கடவுள்–மதம்–நாத்திகம்

மதமும் மனிதாபிமானமும் என்ற தலைப்பில் ஐந்து நாட்கள் ஆய்வு செய்யப்பட்டது. பெரிதும் இதே கருத்து களை தாம் 1947ஆம் ஆண்டு, தாம்பரம்சேனிடோ ரியத்தில், ஷயநோய்க்கு மருத்துவம் பெற்ற சமயம், தான்

சிந்தனை செய்த கருத்துக்களைத், தன் மனைவியோடு உரையாடல் செய்வதாக எழுதியகட்டுரைவழி விளக்கியது எளிதில் புரிந்து கொள்வதாக இருந்தது.

பெண்களை அடிமைப்படுத்தும் மதக்கோட்பாட்டினை கண்டித்து வரும் வங்காள நாட்டு தஸ்லீமாநஸ்ரீனுக்குத் தூக்குத் தண்டனை வழங்கவேண்டும்எனும் மதவெறியை யும் இன்று கண்டித்தார்.

## ஆய்வு: இருபத்தாறு

## கடவுள் ஒரு மருத்துவம்

ஆண்டவனற்ற அறிவியல் என்ற தலைப்புக்கு முரண் பட்டதோ எனத்தோன்றும் இத்தலைப்பு. எனினும் இன்றைய ஆய்வுவழி மாறுபட்ட மனம் படைத்தோர்பலர் ஆண்டவன் ஒரு கற்பனையே ஆயினும், அதன்பால் கொண்ட நம்பிக்கைவழி மனநலம் பெறுகிறார்கள். இதற்கான பல நிலைகளையும் கூறி, அந்நிலைகளையும் ஆண்டவன் அளிக்கும் மருத்துவத்திற்குச் சில பின்விளைவு கள் (side effects) விளைவதை எடுத்தியம்பினார்.

ஆனால் திடமான மனம் படைத்தவனுக்கு ஆண்டவன் எனும் திருமந்திரம் வேண்டியதில்லை. தனக்கெனவும் தன்னைச் சார்ந்தவர்களுக்கெனவும் பொதுவாக மனிதஇன மகிழ்ச்சிக்கெனவும் கடமை புரிவதே சிறந்தது என்றார்.

## ஆய்வு: இருபத்தேழு

## *வாய்மையே வெல்லும்–சரியா?*

தமிழ்நாடு அரசு முத்திரையில் உள்ள இவ்வாசகத்தை கண்டபோது, இது முழுக்க உண்மைதானா எனகேட்கச்

செய்தது. நடை முறை வாழ்க்கையின் பல நிலைகளிலும், வாய்மை வெற்றி பெறுவதில்லை. சில சமயம் மட்டும் வெற்றிபெறுவதை அறிவோம். எனவே **வாய்மையும் வெல்லும்** என்று கூறலாம்.

மாறாக, வெற்றி பெற்றவர்கள் அனைவரும் — அதை முறையாக பெறாத போதும்—வாய்மையுடையவர்கள் என பறைசாற்றிக்கொள்வதை பார்க்கிறோம். எனவே நடைமுறையில் **வென்றதே வாய்மை** என்பதே சரி. இதற்கும் பல உதாரணங்களைக் கூறினார்.

வழக்காடு மன்றங்களில், எப்போதும் வாய்மையே வென்றது என்று கூறமுடியாது. ஒரே வழக்கில் கீழ்நிலை நீதிமன்றம் ஒரு தீர்ப்பும், மேல்முறையீடுவழி, உயர்நீதி மன்றம் மாறுபட்ட தீர்ப்பு அளிப்பதையும் அறிவோம்.

நீதிமன்றங்கள் பலவும், நீதிக்கென வழக்காடும் மன்றங்கள் அல்ல. அவை வெற்றிக்காகப் போராடும் மன்றங்களே. The word Justice was honoured more in the breach. In the court room neither the prosecuting officer nor the defence attorney seek Justice. The name of the game is to win Shiddny seldan.

தர்க்கரீதியாகவும் — காகங்கள் அனைத்தும் கருப்பு என்பது உண்மை. கருப்பு அனைத்தும் காகம் என்பது சரியல்ல. கருப்புகள் சில காகங்கள். இதே முறையில் வென்றதே வாய்மைமுழுமையும்சரி.வாய்மையும் வெல்லும் என்பதும் சரி. **வாய்மையே வெல்லும் என்பது சரியல்ல.**

வாய்மையே வெல்லும் என்ற நம்பிக்கை, எப்போதும் வாய்மை வெற்றி பெற்றிடச்செய்வான் ஆண்டவன் என்ற அடிப்படையில். ஆனால் அட்டடி ஒரு சக்தி இல்லை என்பதை நாம் அறிவோம். எனினும் வாய்மையே வெற்றி பெறச் செய்ய வேண்டும் என்பது மனிதஇன நன்மையை நாடி அதற்கேற்ப அனைவரும் வாய்மையோடு நடந்து கொள்வது நம் கடமை என்றார்.

## ஆய்வு: இருபத்தெட்டு

## தாடி மீசை நாகரீகம்

ஆதிமனிதனுக்கு உடல் முழுமையும் முடி அடர்ந்திருக்கும். பரிணாமவளர்ச்சிவழி, ஆடைஅணியத் தொடங்கிய நிலையில் உடல் முடிகள் குறைந்து தலை முகத்தில் மட்டும் தொடர்ந்தன. இவற்றைத் தாங்கள் விருப்பப்படி மாற்றி அமைத்துக் கொண்டார்கள். பலர் முகத்து முடியை தினம்தினம் மழித்துக் கொள்வர். வேறு பலர் பலவகை தலைமுடி, தாடி, மீசை, கிருதா அமைத்துக் கொள்கிறார்கள். இவற்றின் அமைப்பிற்கும் அவர்தம் உணர்வுகளுக்கும் தொடர்பு இருக்கும். ஐதை எந்த பல்கலைக்கழகமும் ஆய்வு செய்யவில்லை. செய்வது நல்லது.

மனிதனின் பலவகைப்பட்ட இந்த முடியலங்காரத்தை எண்ணியபோது தம் வீட்டு கூடத்தில் அமைந்த பல தெய்வப் படங்கள் நினைவுக்கு வந்ததாம், அங்கே ஒவ்வொரு தெய்வத்திற்கும், ஒரு முடி அலங்காரம், அவர் தம் வாழ்க்கையை அமைந்ததுபோலவே. ஆக மனிதன் தான் கடவுள்களை இவ்வாறு படைத்தான் என்பதற்கு இந்த தாடி மீசை அமைப்பும் ஆதாரம் அளிப்பதாகக் கூறினார்.

## ஆய்வு: இருபத்தொன்பது

## கோளங்களும் மரணங்களும்

ஜீப்பிட்டர் கோளத்தில் ஒரு வால் நட்சத்திரத்தின் வால்பகுதியின் சில துண்டுகள் இடிக்க இருந்தபோது

அவற்றால் உலகிற்கு ஒன்றும் கேடு விளையாது என வானநூல் வல்லார் கூறியபோதும், மதத்தலைவர்கள் கேடுவிளையும் என்று பயமுறுத்தி, யாகம்வளர்த்தார்கள்.

இவ்வாறே வானத்தில் வலம் வரும் கோடிகோடி நட்சத்திரங்கள், இவற்றின் கூட்டு அமைப்புகள் எனப் படும் **ராசி**, சந்திரனின் வளர்பிறை தேய்பிறை தினங்கள் எனப்படும் **திதி**, இவற்றின்வழி மக்களுக்குப் பாதிப்புகள் நிகழும் எனக்கூறி வருகிறார்கள். மதத்தலைவ கள் குறிப் பிட்ட நேரத்தில் ஆபத்து நிகழும் எனவும் பயமுறுத்தி வருகிறார்கள்.

இவற்றில் ஏதேனும் உண்மை இருக்குமோ என ஆய்வு செய்ய விரும்பினார். தான் பணிபுரிந்த ஸ்டான்லி மருத்துவமனையில் இரு வருடங்களில் நிகழ்ந்த சுமார் 2000 மரணங்களை அமாவாசை, பௌர்ணமி, கிருத்திகை முதலியவற்றோடு தொடர்படுத்தி ஆய்வு செய்தார். அவ்வாறே அச்சமயம் எட்டு கோளங்கள் ஒருங்கு சேர்ந்த தினமும் வந்தது. அத்தினத்திற்கும் தொடர்பு ஏற்படுத்தி ஆய்வு செய்தார்.

இவை அனைத்திலுமே, இறந்து போனோரின் எண்ணிக்கை ஒரு முறையாக அமையவில்லை. அமாவாசை, பௌர்ணமி, கிருத்திகை, அந்த எட்டு கோளங்களின் கூட்டமைப்புத் தினத்தில் மரணங்கள் அதிகமாகவில்லை. அவ்வாறே இத்தினங்களுக்கு முன்னும் பின்னும், ஏறுமுகம் இறங்குமுகம் என அமையவில்லை,

இது ஒரு மருத்துவமனையின் இருவருடத்து 2000 மரணங்களை மட்டும் ஆய்வு செய்ததாயினும், செய்த அளவில் **கோளங்களுக்கும் மரணங்களுக்கும் தொடர்பு இல்லை** என்ற முடிவையே அறிவித்தது.

இந்த ஆய்வு குறித்த படங்களைக் காட்டி விளக்கு முன் பொதுவாக, அண்டசராசரம் (Universe) என்றால் என்ன? அது எப்படி உண்டாயிற்று? அது எவ்வளவு

பெரியது? மேலும் விரிவடைவது, நம் சூரியன் ஒரு நட்சத்திரம், (கிரகமல்ல) அதன் ஒன்பது கோள்கள், அவற்றின் தன்மைகள் முதலியவற்றைப் பல வரைபடங்கள் வழி விளக்கினார்.

இவற்றையெல்லாம் இயக்குவன, சிலபல பௌதிக இரசாயன சக்திகள் என்பதை அறிவோம். இவற்றின் ஆய்வுவழி மக்கள் நலம் நாடவேண்டும், கேடுவிளையாது பார்த்துக் கொள்ள வேண்டும். உதாரணம் பூமியில் விழக்கூடிய எரி நட்சத்திரங்கள் வழி. இதைவிட்டு இவற்றை எல்லாம் படைத்து காத்து வருபவன் ஆண்டவன் எனும் ஒரு சக்தி என்பது சரியல்ல. சிந்தனை செய்து, தம் கருத்துப்படி ஆட்டிவைக்கும், எண்ணக்கூடிய ஒரு மாபெரும் சக்தி எங்கும் இல்லை என்ற முடிவினையே இந்த வானவெளி ஆய்வும் அளிக்கிறது என்றார்.

## ஆய்வு முப்பது

## அறிவியல் வெறும் இயற்பொருள் வாதமல்ல அதுவே ஆத்மாவுக்கு உதவுவது

அறிவியல் வழிதான் மனிதன் எல்லாத்துறைகளிலும் முன்னேற்றமடைந்து வருகிறான். மதத்தின்வழி அல்ல. இவற்றிற்குப் பயன் படுத்தப்படுவது இயற்பொருளாயினும், அவற்றின்வழி அவன் நோய் அளித்த வேதனை இன்றியும், பிறவசதிகளோடு நலமாக வாழ்வதும் மனத்தளவில் சுகமாக வாழ்வதற்கே.

ஒருமனிதன் என்றாலே, அவன் வெளிப்புற உடல் அமைப்பும், அதில் நலமுடன் பணிபுரியும் சில முக்கிய உறுப்புகளும் என்பதாயினும், **அவன் மனம்தான் அவன்.** புத்தர்கூறியது இதற்கு ஆதாரமாகும்.

He who sees my mortal body sees me not
He who sees the body of my teaching, he alone sees me.

மதம் ஆத்மாவுக்கு —மனத்திற்கு உதவுகிறது. மாறுபட்ட மனநிலையில் இதமளிக்கிறது என்பது சரி. ஆனால் திடமான மனம் படைத்தவனுக்கு இது அவசியமில்லை. அதோடு, இறந்தபின் ஆத்மா சாந்தி அடைய, போகுமிடத்திற்குப் புண்ணியம்தேட மதவழிபாடு வேண்டும் என்பது சரி அல்ல. போகுமிடமென்பது ஒன்றும் கிடையாது. மறுபிறவி என்பது கிடையாது, என்பதால். ஒருவர் இறந்தபோது அவர் ஆதமாவும் முடிவுக்கு வருகிறது.

அறிவியலைத் தங்கள் மதபோதனைகளுக்குப் பயன்படுத்தும் இவர்கள் (Video and Audio cassette— public address system, மூலவருக்கு குளிர்சாதனம், புரோகிதம் செய்ய முன்பு நடந்து செய்தார்கள். இப்போது பறக்கவும் செய்கிறார்கள்) அது ஆத்மஞானத்திற்கு உதவாது என்றுகூறுவது விந்தை.

அறிவியல் அழிவு வேலைகளுக்குப் பயன்படுகிறது என்பது ஒரு குறைபாடு. உதாரணம் அணு ஆயுதம், CBN போன்ற பல போர் ஆயுதங்கள் வழி எதிரி நாட்டினை அழிக்கப்பயன்படுத்துகிறார்கள். பயங்கரவாதிகளின் வெடிகுண்டுகள் பல அழிவுவேலைகளைச் செய்கின்றன. இனவெறி, மதவெறி, நாட்டுவெறி, மாற்றானை அழிக்க முயல்கின்றன. இதை நாமும் கண்டிக்கிறோம். இக்கொடுமைகளைப்புரிய அறிவியலைப் பயன்படுத்தக்கூடாது. மனித நலன் நாடமட்டுமே பயன்படுத்தவேண்டும். பிரிவினை வெறிகளை நீக்கி மனிதாபிமானத்தோடு, வேதனை நீங்கிய மனத்தோடு, ஆத்மதிருப்தியோடு தொடர்ந்து வாழவே அறிவியலைப் பயன்படுத்த வேண்டும். ஆக, அறிவியலே ஆத்மாவுக்கு உதவுவது.

நம் ஆய்வுமையமே, அறிவியல் வழி மூடநம்பிக்கைகள் நீக்கிய, பல வெறிகளும் நீக்கிய நிலையில் மனிதாபிமானத்தோடு வாழ வழி வகுப்பதே — **அறிவியல் வழி** மனிதாபிமானம்.

**TVஇல் ஆய்வு மையம்**

நம் ஆய்வு மையத்தின் உறுப்பினர்கள் சிலரையும், நடத்துனர் கா. நடராஜன், அவர் மனைவி சரோஜினியையும் திருமதி நளினிசிங் அவர்கள் தலைமையில் டெல்லி TVகுழு பேட்டி கண்டார்கள்.

கடவுள் இல்லை என்ற எண்ணம் உங்களுக்கு எப்படி வந்தது என்று பலரைக் கேட்டார்கள். தம் வாழ்வில்— உலகில் நிகழ்ந்த, நிகழும் சில முரண்பாடுகளை எண்ணி இவற்றை அனுமதித்திருக்கும் மேலான ஒரு சக்தி இருக்க முடியாது என்ற எண்ணம் எழுந்தது என்றனர்.

கா. நடராஜன் அவர்கள், கடவுள் தத்துவத்தை மறுப்பதற்கான அறிவியல் விளக்கத்தையும் அளிததார். சிந்தித்து, அண்ட சராசரத்தையும் இயக்க வல்ல ஆண்டவனின் அவ்வளவு பெரிய மூளை எங்கும் இல்லை. என்றபோது, நளினிசிங் கேட்டார்கள், ஏன் பரந்த நட்சத்திர மண்டலங்களுக்கிடையே (Among the Galaxies) இருக்கலாமே? என்று.

Galaxtes என்றால் என்ன? அவை எப்படி இயங்குகின்றன என்பவற்றை அறிவியல் வழி அறிவோம். அங்கே சிந்தனை செய்யவல்ல ஒரு சக்தியும் (மூளையும்) இல்லை என்பதை அறிவோம் என்றார்.

அவர் மனைவியைக் கேட்டார்கள், நீங்களும் இக் கருத்துடையவர் தாமா? ''ஆமாம். அவர் விளக்கக் கேட்டு அறிந்து கொண்டேன்'' என்றா .

உங்கள் மாங்கல்யத்தை அகற்றிவிட்டது உண்மையா? அகற்றியதால் அவருக்கு ஆபத்து உண்டாகும் என்ற பயம் இல்லையா?

மாங்கல்யத்தை அகற்றிவிட்டது உண்மை. அதன் வழி அவருக்கு ஆபத்து நிகழும் என்று எண்ணவில்லை.

ஆபத்தளிக்கவல்ல பெரிய அறுவை சிகிச்சை செய்து கொண்டபோது, நீங்கள் ஆண்டவனைத் தொழவில்லையா? அப்போது நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?

அறுவை மருத்துவரின் அறிவியலிலும், அவரின் அறுவைத் திறமையிலும் நம்பிக்கை இருந்தது. ஆண்டவன்தொழுகைவழி ஆபத்தைத் தவிர்க்கலாம்என்று எண்ணவில்லை. அவர் இறந்துபோவதாயின், பின்னர் நான் எவ்வாறு குடும்பத்தை நடத்தவேண்டும் என்பதை முன்கூட்டியே முடிவு செய்திருந்தோம். அந்த எண்ணத்திலும், அறுவை செய்வதைத் கற்பனை செய்து கொண்டுமிருந்தேன்.

இந்த பேட்டியை ஒரு நாள் டெல்லி தொலைக்காட்சியில் காட்டினார்கள். □



## Dr. K. N. அவர்களின் சில மேற்கோள்கள்

## A Few Quotable Quotes of Dr. K. N.

1. பிறரை மகிழவைத்து அவர் மகிழ நாம் மகிழ வேண்டும். பிறரைத் துன்புறுத்தி அவர்தம் துன்பம் கண்டு மகிழக்கூடாது.
2. நாம் கூறும் இச்சொற்கள், நாம் புரியும் இச் செய்கைகள், பிறருக்கு வேதனை அளிக்குமோ, உடலுக்கு கேடு விளைவிக்குமோ, அப்படி யாயின், அவ்வாறு பேசமாட்டோம், செய்ய மாட்டோம்.
3. Neither be Irritable nor be Irritating.
4. What we Know is science
   Our ignorance is god.
5. Ignorance is the Mother of Mystery
   மடமையின் மடியில் மலர்ந்தது மகத்துவம்
6. If it is He who heals,
   Who then begets the evils?
7. கடவுளை ஆக்கலும் காத்தலும் நம் தொழில்.
   அவர்தம் வாழ்வும் தாழ்வும் நம் கையில்.
8. ''கடவுள் ஒரு கற்பனை'' எனும் உண்மையை ஏற்போன், நம்புபவன்.
   He is the believer- a Truist.
   இந்த உண்மையை ஏற்காதவர்கள் (The vast majority) நம்பாதவர்கள்.
   They are the unbelievers.
9. உயிர் அணுக்கள் தொடர்கின்றன-
   உயிர் தொடர்வதில்லை.
10. இளமை முதலே மனிதாபிமானம் கற்பிப்போம். எங்கும் எப்போதும் மனிதாபிமானம் கடைபிடிப் போம்.

SB
8-90